REGD. No TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the [illegible] (MADRAS) Phone 812818 4 பக்கம் விலை 35 காசு



# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்



மலர்: 4 சென்னை 3-8-1980 ஞாயிறு (★) ❋ ● ❋ (★) வெளியீடு: 4-8-1980 திங்கள் இதழ் 266

## மத்திய அரசிடம் தமிழக அரசு அதிகமண்எண்ணை கேட்கவில்லையா

## அமைச்சர் வீரேந்திர பாட்டிலின்

# பச்சைப் பொய்

## தமிழக அரசு கேட்டது - மத்திய அரசு மறுத்தது - இதுவே உண்மை

சென்னை, ஆக. 3-தமிழ்நாட்டுக்கு அதிக அளவில் மண்எண்ணையை தமிழக அரசு கேட்கவில்லை என்று மத்திய பெட்ரோலியம் அமைச்சர் வீரேந்திரபாட்டில் தெரிவித்துள்ள குற்றச்சாட்டை தமிழக அரசு வன்மையாக மறுத்துள்ளது. அதிக அளவில் மண்எண்ணை, டீசல் ஆகியவைகளை ஒதுக்கித்தரும்படி தமிழக அரசு அடிக்கடி கோரி வந்துள்ளதாக தமிழக அரசு உயர் அதிகாரி ஒருவர் தெரிவித்தார்.

ஒசூரில் நடந்த காமராஜர் பிறந்தநாள் விழாவில் மத்திய பெட்ரோலிய அமைச்சர் பேசிய பேச்சு பத்திரிகைகளில் இன்று வந்துள்ளது.

தமிழக முதலமைச்சர் கூடுதல்மண்எண்ணை டீசல் கேட்கவில்லை; கேட்டால் கொடுத்து இருப்போம் என்று மத்திய அமைச்சர் குற்றஞ் சாட்டிப் பேசி இருக்கிறார்.

### உயர் அதிகாரி பேட்டி

மத்திய அமைச்சர் தெரிவித்துள்ள குற்றச்சாட்டு குறித்து தமிழக அரசு உயர் அதிகாரி ஒருவரிடம் "அண்ணா" நிருபர் கேட்டபோது அவர் கூறியதாவது:

தமிழகத்திற்கு மாதம் ஒன்றுக்கு 45 ஆயிரம் கிலோ லிட்டர் மண்ணெண்ணை தேவைப்படுகிறது.

ஆனால் மத்திய அரசு தமிழ் நாட்டுக்கு மாதம் 27 ஆயிரம் முதல் 30 ஆயிரம் கிலோ லிட்டர் மண்ணெண்ணெய்தான் ஒதுக்கி வருகிறது.

மத்திய அரசு ஒதுக்கும் மண்ணெண்ணெய் முறைப்படி - நியாய விலையில் குடும்ப அட்டைகள் மூலம் பொதுமக்களுக்கு விநியோகம் செய்யப்படுகிறது கைவண்டிகள் மூலம் நியாய விலையில் விற்கப்பட்டு வருகிறது.

விற்பனை முழுவதும் கண்காணிக்கப்பட்டு வருகிறது.

### அபத்தம்

அதிகாரிகள் உடந்தையோடு தமிழகத்தில் மண்எண்ணெய் கறுப்புச் சந்தையில் விற்கப்படுகிறது என்றுசொல்வது அபத்தம் ஆகும். அப்படிப்பட்ட நிலை தமிழகத்தில் இல்லை.

### சீரான விநியோகம்

முறையான விநியோகம்-நியாயமான விலையில் விநியோகம் நடைபெற்று வருகிறது.

இதில் முறைகேடுகள் நடைபெற்றால் அவைகளும் உணவுத்துறை கண்காணிப்பு காவல்துறையினரால் கண்காணிக்கப்படுகிறது.

இந்த ஆண்டு ஜனவரி முதல் ஜூலை முடிய ஏறத்தாழ ரூ. 4 கோடி மதிப்புள்ள பதுக்கல் - கள்ள மார்க்கெட் பொருள்கள் கைப் பற்றப்பட்டுள்ளன. இதில் மண்எண்ணையும் இடம் பெற்றுள்ளது.

ஆகவே மத்திய அமைச்சர் தெரிவித்து இருக்கும் குற்றச்சாட்டு முறையானது அல்ல. சரியானதும் அல்ல.

டீசலும் சரியான நியாயமான முறையில் விற்பனை நடந்து வருகிறது.

மண்ணெண்ணெய் டீசல் இரண்டையும் கூடுதலாக ஒதுக்கித் தரும்படி மத்திய அரசிடம் தமிழக அரசு மாதா மாதம் கேட்டு வருகிறது.

அண்மையில் உணவுத் துறை அமைச்சர்கள் மாநாட்டில் கலந்து கொள்ளச் சென்ற தமிழக உணவுத்துறை செயலாளர் மத்திய அமைச்சரிடம் தமிழகத்திற்கு அதிக மண் எண்ணை ஒதுக்கும்படி ஒரு சிறப்புக்

(8-ம் பத்தி பார்க்க)

## கருணாநிதியாரின் புதிய பித்தலாட்டம்

அரசு விழாக்களில் தமிழக முதல்வர் அரசியல் பேசுகிறார் என்று பிரதமர் இந்திராவுக்கு கடந்த மாதம் தந்தி அனுப்பினார் கருணாநிதி.

**அந்தத் தந்தி பொய்யை அடிப்படையாகக் கொண்டது என்று அப்போதே பதிலடி கொடுத்தோம்.**

அந்த விவகாரத்தை இத்தனை நாள் பொறுத்து எடுத்துக் கொண்டு முரசொலியில் கடிதம் எழுதியிருக்கிறார் கருணாநிதி.

இந்த விஷயத்தில் இப்போது புதிய பித்தலாட்டம் ஒன்றையும் அவர் நடத்தியிருக்கிறார்.

**"நான் கொடுத்த தந்தியிலும் சமபந்திபோஜன விழாவை அரசாங்க விழா என்று குறிப்பிடவே இல்லை. கவர்னர் கலந்து கொண்ட விழா என்றுமட்டுமேகுறிப்பிட்டிருக்கிறேன்.**

-இவ்வாறு இன்றைய (3ந்தேதி) முரசொலியில் கருணாநிதி எழுதியிருக்கிறார்.

ஆனால் கடந்தமாதம் 15ந்தேதி நடந்த சமபந்தி போஜன விழா பற்றி 16-ந தேதி முரசொலியில்கீழ்க் கண்டவாறு கருணாநிதி எழுதியிருக்கிறார்.

**இன்று (ஜூலை 15-ந்தேதி) இங்கு அரசு சார்பாக நடைபெற்ற காமராஜர்பிறந்தநாள்விழாவில்கூடமாநில ஆளுநரைஉடன்வைத்து கொண்டே தி மு கழகம் ஒரு நல்ல கட்சியல்ல என்று தமிழ்நாடு முதல்வர் கண்டித்திருக்கிறார்**

-கருணாநிதி ஏன் இப்படிக் குழப்புகிறார்?

ஜூலை 16 ந் தேதி முரசொலியில் வெளிவந்ததை ஆகஸ்டு 3 ந தேதி வந்து அப்பட்டமாக மறைப்பானேன்-மறுப்பானேன்?

அன்று முரசொலி தவறாக எழுதியதா?

அல்லது இன்று இவர் தவறாக எழுதுகிறாரா?

அரசு விழா என்று கருணாநிதி குறிப்பிடும் சமபந்தி போஜனவிழா அரசு விழா அல்ல.

தவறாகப் புரிந்து கொண்டு தந்தி கொடுத்த கருணாநிதி தடுக்கி விழுந்துவிட்டார்.

கருணாநிதி தந்தி கொடுத்த அந்த நாளில் அரசு நடத்திய காமராஜர் விழாவில் கவர்னரும், முதல்வரும் கலந்து கொள்ளவில்லை.

ஒரு பொய்யை மறைக்க ஒன்பது பொய்களைத் தயார் செய்கிறார் அவர். பாவம்!

-புலிகேசி

"பொற்காலம்" படத் துவக்க விழாவில் முதல்வர் புரட்சித்தலைவருடன் டைரக்டர் துரை, தயாரிப்பாளர் குஞ்சப்பன்.

## புதுவை தி. மு. க. அரசு மீது ஜனதா தலைவர் புகார்

புதுவை, ஆக. 3. புதுவை மாநிலத்தை ஆளும் திமுக-இந்திரா காங்கிரஸ் கூட்டணி அரசு விவசாயிகள் நலனைப் புறக்கணித்து விட்டது என்று சட்டமன்ற எதிர்க்கட்சித் தலைவர் பி.உத்திரவேலு குறிப்பிட்டுள்ளார்.

குறிப்பாக விவசாயிகளின் கடன்களைத் தள்ளுபடி செய்யத் தவறி விட்டது என்று ஜனதா கட்சியைச் சேர்ந்த பி. உத்திரவேலு ஓர் அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்.

❋

## ரூ. 2 லட்சம் தங்கம் பறிமுதல்

கோவை, ஆக. 3- இம்மாதம் மத்திய சுங்க இலாகா அதிகாரிகள் நடத்திய திடீர் சோதனையில் ரூ 1.83 லட்சம் மதிப்புள்ள கணக்கில் வராத தங்கம் சிக்கியது.

❋

## அரசுக்கு குடிநீர் வாரிய ஊழியர்கள் நன்றி

சென்னை, ஆக. 3- அரசுஊழியர்களுக்கு விலைவாசிப்படியை உயர்த்துவதற்கு முதல்வர் புரட்சித்தலைவர் நிதியமைச்சர் நாவலர் ஆகியோருக்கு தமிழ்நாடு குடிநீர் வடிகால வாரிய ஊர்தி ஓட்டுநர்கள் சங்கம் நன்றியும் பாராட்டும் தெரிவித்துள்ளது.

# முதல்வர் வழியனுப்ப டாக்டர் நாவலர் வெளிநாடு பயணம்

சென்னை, ஆக 3-

வெளிநாடு பயணமான நிதியமைச்சர் நாவலரை முதல்வர் புரட்சித்தலைவர் மாலை அணிவித்து வாழ்த்துக் கூறி வழியனுப்பி வைத்தார்.

கழகபொதுசெயலாளர் ப உ ச,அமைச்சர்கள் பண்ருட்டி, கே ஏ கே, ராகவானந்தம், திருநாவுக்கரசு, ராஜாமுகமது, தலைமை நிலையச் செயலாளர் எம் எஸ்அப்துல்காதர்,தொழிற் சங்கப் பிரிவுச் செயலாளர் வை பெருமாள், ஜேப்பியார், எம் எல் சி மேலவைத்துணைத் தலைவர் புலமைப்பித்தன், இரா. தாமரைக்கனி எம் எல் ஏ, பாவலர் முத்துசாமி டாக்டர் பிடோஜெனார்த்தனம்,எம் பி, புதுவை மாநில கழக பொருளாளர் பி கே லோகநாதன்,சேதுராமன் எம் எல் ஏ, வழக்கறிஞர் ராமகிருஷ்ணபாபு.தி நகர் மூர்த்தி, குக செல்வம் கருநாடக மாநில பேராசிரியர் சீனிவாசன், மதுரை கருணைதாசன், நிலவழகன், எச்.ஜி. ஆறுமுகம், சுந்தரம், தமிழ் நாடு இயல் இசை நாடக மன்றச் செயலாளர் டி, வி. நாராயணசாமி,ஜான் வின்சென்ட்,திருச்சி நல்லுசாமி. பி,சி. ராமன், டி. வி. பரமசிவன். தருமபுரி நடராசன், ஸ்ரீ வில்லிபுத்தூர் சங்கையா, போலிஸ் ஐ,ஜி. பரமகுரு தலைமை நிலைய பொறுப்பாளர் துரை. திருநெல்வேலி சீனிவாசன், எம். ஏ ஜப்பார், துரையரசன், ச. துரைசாமி, மு. கிருஷ்ணன், தெய்வசிகாமணி முன்னாள் துணை வேந்தர் சிட்டிபாபு, ஆகியோர் நாவலருக்கு மாலைகள் அணிவித்து வழியனுப்பி வைத்தனர்.

### செயல் வீரர்கள்

திரளான கழக மன்ற சார்பு மன்றச் செயல் வீரர்கள் விமான நிலையத்தில் திரண்டிருந்து டாக்டர் நாவலரை வழியனுப்பி வைத்தனர்.

சென்னை மாவட்ட அண்ணா தமிழ் இலக்கியக் கழக பொறுப்பாளர் நாகை தருமன் கைத்தறி ஆடை அணிவித்தார்.

மாநில புரவலர் குழுச் செயலாளர் டாக்டர் வகாப், பொருளாளர் பிடி ராகவன், தஞ்சை ராமானுஜம், ஆணையூர் இஸ்மாயில்,நாஞ்சில் புதுமையாளன், மா பா சாரதி, தாழம்பேடு கவிப்பித்தன். எஸ் எஸ் பரமசிவம், அண்ணா குரல் ஜி, கே. சாமி, எச், முகமதான், ஏ. செல்வராசு இரா. தேன்மொழியான், டி எஸ் ராமசாமி ஆனந்த் முத்துநாயகம், திருப்போரூர் கண்ணசன் ஆகியோரும் நாவலருக்கு மாலை அணிவித்து வழியனுப்பி வைத்தனர்.

காந்தி காமராஜ் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த டாக்டர் சாமிசண்முகம், எர்னஸ்ட்பால், ஆம்பல் ராமையன், பொன்னேரி புகழேந்தி ஆகியோரும் நாவலருக்கு மாலை அணிவித்தனர்.

### நாவலர் வீட்டில்

முன்னதாக நிதியமைச்சர் நாவலரின் இல்லம் சென்று, அமைச்சர்கள் எஸ் டி எஸ், காளிமுத்து, முத்துசாமி, கோமதிசீனிவாசன் மற்றும் டி. கே. கபாலி எம் எல் ஏ, ஈ. எஸ். வெங்கடேசன் எம். எல். சி, ஏ. பி. அனந்த ராமகிருஷ்ணன், ஜி. ஆர். தாமோதரன் ஆகியோர் மாலைகள் அணிவித்தனர்.

தமிழ்பண்பாட்டு மாநாடு மோரீஸ் தீவில் இந்த மாதம் 4-ந் தேதி முதல் 8-ந்தேதி வரை நடக்கிறது நிதியமைச்சர் நாவலரும் அமைச்சர் அரங்கநாயகமும் கலந்து கொள்கின்றனர்.

மாநாடு முடிந்ததும் நாவலர் மோரீஸ் தீவிலிருந்து புறப்பட்டு லண்டன்- ரோம் ஏதென்ஸ், கெய்ரோ போன்ற நாடுகளுக்குச் செல்கிறார்,

நிதியமைச்சர் நாவலருடன் உலகத்தமிழ்ஆராய்ச்சி நிறுவன இயக்குநர் எஸ் வி சுப்பிரமணியமும் வெளிநாடு சென்றார்.

டாக்டர் நாவலரின் துணைவியார் டாக்டர் விசாலாட்சி, மகன் மதிவாணன் மருமகள் சாந்தி மற்றும் உறவினர்கள் நிதியமைச்சரின் அலுவலக ஊழியர்கள் விமான நிலையம் வந்திருந்து வழியனுப்பி வைத்தனர்;

(4-பத்தி தொடர்ச்சி)

குறிப்பையும் கொடுத்து இருக்கிறார்.

இப்படி நிலைமை இருக்க தமிழகஅரசு கூடுதல் மண்ணெண்ணை டீசல் கேட்கவே இல்லை கேட்டால் கொடுத்திருப்போம் என்று மத்திய அமைச்சர் கூறியிருப்பது சரியானது அல்ல.

இவ்வாறு அந்த உயர் அதிகாரி கூறினார்.

## தி. மு. க. - ஜனதாவைச் சேர்ந்த 125 பேர் கழகத்தில் இணைந்தனர்

சென்னை, ஆக, 3 பி அண்டு சி மில் தொழிலாளர்கள் 125 பேர் திமுக-விலிருந்தும், ஜனதாவிலிருந்தும் விலகி இன்று பொதுச் செயலாளர் ப. உ. ச.. தொழிலாளர் நல அமைச்சர் ராகவானந்தம் ஆகியோர் முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

தலைமை நிலையச் செயலாளர் அப்துல்காதர், தொழிற்சங்கப் பிரிவுச் செயலாளர் வை பெருமாள் ஆகியோர் உடனிருந்தனர்.

பி அண்டு சி மில் தொழிற்சங்க முன்னாள் துணைத்தலைவர் எம். துரைராஜ், முன்னாள் கூட்டுச் செயலாளர் பிரேம்குமார் சென்னை தொழிலாளர் சங்க நிர்வாகக்குழு உறுப்பினர் அருணாசலம், முன்னாள் நிர்வாகக்குழு உறுப்பினர் கணேசன், தொழமைக் கழக நிர்வாகக் குழு உறுப்பினர்கள் ஞானமூர்த்தி, அருள்தாஸ், பி அண்டு சி மில் முன்னாள் தொழிற் சங்கத் துணைத் தலைவர்கள் தினதயாளன், முனுசாமி, நிர்வாகக் குழு உறுப்பினர் காதர்பேக் கேண்டீன் டைரக்டர் ஜெயவேலு சென்னைத் தொழிலாளர் சங்கப் பொருளாளர் தெங்காதரம் (வடசென்னை ஜனதா செயற்குழு உறுப்பினர்), பி.அண்டு சி மில் ஸ்டாப் யூனியனைச்சேர்ந்த பாலசுந்தரம் ஆகியோர் அவர்களில் குறிப்பிடத் தக்கவர்கள் ஆவர்,

இவர்கள் கழகத்தில் இணைந்தபோது பெரம்பூர் தொகுதி கழக அமைப்பாளர் ஜெயபால் புரட்சித் தலைவர் பொதுநல மன்றத்தின் பொறுப்பாளர்கள் பக்கிரிசாமி,எம் பாலகிருஷ்ணன், ஜி. பாலகிருஷ்ணன் ராமச்சந்திரன், நித்தியானந்தம் ஆகியோரும் உடனிருந்தனர்.

இடைப்பாடி கணேசன் பேச்சு

# கவர்னர் ஆட்சியில் மருத்துவ மேல்படிப்பு தேர்தல் முறைகேடு

**சென்னை, ஆக. 3-தமிழகத்தில் கவர்னர் ஆட்சியின் போது மருத்துவ மேல் படிப்புக்கு மாணவர்களைத் தேர்ந்தெடுத்ததில் முறைகேடுகள் நடந்ததாக கழக எம் எல் ஏ கணேசன் குற்றம் சாட்டினார்.**

சட்டப்பேரவையில் மக்கள் நல்வாழ்வுத்துறை மானியக் கோரிக்கை மீது கழக உறுப்பினர் இடைப்பாடி கணேசன் பேசும் போது கூறியதாவது:-

மருத்துவ வசதிகளை இந்த அரசு பரவலாகச் செய்து வருகிறது. மேலும் இது பரவலாக்கப்பட வேண்டும். மாநகரங்களிலும், பெரு நகரங்களிலும் நகர்ப்புறங்களிலும் மருத்துவமனைகளைக் கட்டுவதற்கும், பல மாடிக் கட்டிடங்களைக் கட்டுவதற்கும் செலவழிக்கப்படுகின்ற தொகையைக் கட்டுப்படுத்தி- குறைத்து- கிராமப்புறங்களில் சுகாதார நிலையங்களையும், சிறிய மருத்துவமனைகளையும் அமைத்திட வேண்டும் அதிலே தீவிர கவனம் செலுத்தப்பட வேண்டும். அதற்கு முக்கியத்துவம் தரப்பட வேண்டும்.

மருத்துவக் கல்விக்காக இந்த அரசு பல கோடி ரூபாய்களை ஆண்டு தோறும் செலவழிக்கிறது. ஒரு மாணவர் பல ஆண்டுகள் படித்துப் பட்டம் பெறுகிறார். ஒரு டாக்டரை உருவாக்க அரசுக்கு சுமார் இரண்டு இலட்சம் வரை செலவாகிறது. மக்களுடைய வரிப் பணத்திலிருந்து அதுவும் கிராம மக்களுடைய உழைப்பில் இருந்து அவர்களது இரத்தத்தில் இருந்து திரட்டப்பட்ட நிதியிலிருந்து செலவழித்து டாக்டர்களை உருவாக்குகிறோம். ஆனல் அவர்கள் கிராமபுறங்களைத் திரும்பிப் பார்ப்பதில்லை. தங்களை உருவாக்கிய கிராம மக்களைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. தாங்கள் நகரங்களில் வசதியாக வாழவேண்டும். நிறைய சம்பாதிக்க வேண்டும் என்று விரும்புகிறார்களே தவிர, மக்களுக்குச் சேவை செய்ய வேண்டுமென்று நூற்றில் ஒருவர் கூட நினைப்பதில்லை. இது மிகவும் கவலை தரக்கூடிய நிலைமையாகும்.

## கிராம சேவை

லட்சம், லட்சமாகச் செலவழித்து "எம். பி. பி. எஸ்." பட்டம் படிக்க வைப்பதைக்காட்டிலும், மூன்றாண்டுகளில் முடிக்கக் கூடிய அளவில் அடிப்படை மருத்துவக் கல்வியை மட்டும் அளித்து, கிராமங்களில் சேவை செய்யக் கூடிய சிறிய டாக்டர்களை நாம் நிறைய உருவாக்க வேண்டும். அவர்கள் கிராமங்களில் பணிபுரிய வேண்டும் என்பதைக் கட்டாயமாக்க வேண்டும்.

ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு சுகாதார நிலையம் அமைக்க வேண்டும் என்பதை லட்சியமாகக் கொண்டு அந்த அடிப்படையில் கிராம சுகாதார நிலையங்களை ஏற்படுத்த வேண்டும்.

மேலும் எம்பிபிஎஸ் பட்டம் பெற்ற டாக்டர்கள் முதல் ஐந்து வருடங்களாவது கிராமப்புறங்களில் பணியாற்ற வேண்டும் என்பதை கட்டாயமாக்க வேண்டும், அப்படிப் பணியாற்றுகிறவர்கள் மட்டும அரசுப் பணியில் நிரந்தரமாக்கப் படுவார்கள் என்ற நிலைமையை உருவாக்க வேண்டும.

இடைப்பாடி தொகுதியில் சுமார் 1,46,000 வாக்காளர்கள் உள்ளனர். சுமார் 4 லட்சம் மக்கள் வசிக்கிறார்கள். இங்கு இடைப்பாடி நகரில் ஒரு சில மருத்துவமனையும், சித்தூர், கொங்கணாபுரம், மகுடஞ்சாவடி ஆகிய ஊர்களில் ஆரம்ப சுகாதார நிலையங்களும் இருக்கின்றன. இதிலிருந்து மருத்துவ வசதிகள் எந்த அளவிற்கு கிராம மக்களை அடைந்திருக்கிறது என்பதை உணரலாம்.

## புதிய கட்டிடம்

இடைப்பாடி நகரத்தில் உள்ள மருத்துவமனைக்குப் புதிய நல்ல வசதிகளோடு கூடிய கட்டிடம் கட்ட அரசு முயற்சிக்கவேண்டும் மேலும் குறைந்தது 50 படுக்கை வசதியாவது இந்த மருத்துவமனையில் ஏற்படுத்த வேண்டும், இதில் மகப்பேறு மருத்துவப்பகுதி ஏற்படுத்த வேண்டும். மேலும் இடைப்பாடி மருத்துவமனையில் ஓர் பல் வைத்தியப்பிரிவும் ஆரம்பிக்க வேண்டும்.

அதேபோல், மருத்துவக் கல்லூரிகளில் மேல்பட்டப் படிப்பிற்காக அண்மையிலே ஒரு தேர்வு நடைபெற்றது தேர்ந்தெடுக்கப் பட்டவர்கள் பட்டியல் வெளியிடப் பட்டுள்ளது. அதில் பல்வேறு விதமான ஊழல்கள் நடைபெற்றுள்ளன என்று சொல்லப்படுகிறது இந்தத் தேர்வு யாரால்- எப்போது நடைபெற்றது என்பதைக் கவனிக்க வேண்டுகிறேன், தமிழகத்தில் 17-2-1980 அன்று கவர்னர் ஆட்சி அமுல் படுத்தப்பட்டது, அந்த கவர்னர் ஆட்சி 9 6 1980 அன்று நீங்கியது. இந்த இடைப்பட்ட காலத்தில் தான் இந்த மருத்துவக் கல்லூரி மேல்பட்டப்படிப்பிற்காக தேர்வுகள் நடத்தப்பட்டன. இந்த 4 மாத காலத்தில் தமிழகத்தில் எப்படிப்பட்ட ஊழல்கள் நடைபெற்றன என்பதற்கு இந்தப் பட்டியலே சாட்சி கூறுகிறது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன் மேல் பட்டப் படிப்பிற்காக நேர்முகத் தேர்வு நடைபெறுகிறது. அதில ஒரு நாள் சுமார் 150 டாக்டர்களை நேர்முகத் தேர்வுக்கு அழைக்கிறார்கள், அங்கே வரிசையாக முறைப்படி அழைக்காமல் இரண்டு டாக்டர்களை மட்டும முதலில் அழைக்கிறார்கள் அவர்களுக்கு மட்டும் இராச மரியாதை தேர்வுக்குழு அவர்களிடம் கேட்கிறது இந்த மேல் பட்டப் படிப்பை உங்களால் நல்ல முறையில் தொடர முடியுமா என்று எங்கள் பணிக்குக் குந்தகம் இல்லாமல மேல்பட்டப்படிப்பை நாங்கள் முடிப்போம் என்றுகூறுகிறார்கள். உடனே அவர்களிடம் தேர்வுக் குழுவினர் கூறுகிறார்கள், நீங்கள் போகலாம், உங்களை நாங்கள் தேர்ந்து எடுத்துவிட்டோம் என்று, எப்படி இருக்கிறது என்பதைப் பார்த்தீர்களா? தேர்வு எப்படி நடைபெற்றது. யார் யாருக்கு அந்த இராச உபசாரம் நடைபெற்றது என்பதை இந்த மாமன்றத்தில் இருப்பவர்கள் அறிந்து கொள்ள வேண்டும்.

## தி. மு. க. எம். பி. கள்

அந்த மரியாதைக்குரிய மாணவர்கள் இரண்டு பேரும் திராவிட முன்னேற்றக் கழகத்தின் நாடாளுமன்ற உறுப்பினர்கள் என்பது நாடறிந்த உண்மையாகும் என்பதைச் சொல்லிக் கொள்கிறேன் நாடாளுமன்ற உறுப்பினர்களாகவும் பணியாற்றுவார்களாம் மேல்பட்டப் படிப்பும் படிப்பார்களாம்.

பொது மக்கள் சேவை என்பது வேஷம், தன்னலம் நாடி முன் ஓடுவதில் நாட்டம், ஆறு லட்சம் மக்களின் பிரதிநிதியாக நாடாளுமன்றத்தில் செயல்படுவதைக் காட்டிலும், தன்னுடைய சுயலாபத்திலேயே கவனமாக இருக்கிறார்கள் என்பது இதிலிருந்து தெரிகிறதல்லவா? இப்படிப்பட்டதோர் ஊழல் பட்டியலைத்தான் ஆளுநர் ஆட்சிக்காலத்தில் தயாரித்தார்கள். மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர் நமது முதலமைச்சரிடத்திலே இதனைச்சுட்டிக்காட்டினார். புரட்சித்தலைவர் ஆளுநர் ஆட்சிக் காலத்தில் தயாரித்த பட்டியலில் எந்த விதமாற்றமும் செய்யவேண்டாம். அதை அப்படியேவெளியிடுங்கள். அப்போதுதான் மக்கள் ஆளுநர் ஆட்சிக் காலத்தில் ஊழல்கள் எப்படி, எப்படி நடைபெற்றன என்பதை தெரிந்து கொள்ளமுடியும் என்று கூறி அதை அப்படியே வெளியிடச் செய்தார்.

## நீதிதேவன் மயக்கம்

அதனால் தான் இன்று சந்தி சிரிக்கின்றது உயர்நீதிமன்றத்தில் நீதிதேவன் மயக்கமடையும் நிலைமை ஏற்பட்டிருக்கிறது தமிழகத்தைப் பொறுத்த வரை ஆளுநர் ஆட்சி என்று பெயர் இருந்ததே தவிர- சில அரசியல் கட்சியினர் தான் ஆட்சியை நடத்தினார்கள்.

இன்றைய தின எதிர்க்கட்சித் தலைவரும் அவரது பரிவாரங்களும் அதிகாரிகளுக்குக் கட்டளைகளையும் மரட்டல்களையும் தாராளமாக வழங்கினார்கள் என்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன் பல அதிகாரிகளும் அவ்வப்போது அவரைப் பார்த்து சலாம் போட்டு வந்தார்கள். சலாம் போடாத அதிகாரிகள் சங்கடங்களுக்கு ஆளானார்கள், இப்படியெல்லாம் நடைபெறும் என்று எண்ணித்தான் தமிழகத்து மக்கள் புரட்சித்தலைவர், பொன்மனச் செம்மல், கொடை வள்ளல், நித்திய சக்கரவர்த்தியிடம் மீண்டும் தமிழக ஆட்சிப்பொறுப்பை ஒப்படைத்தார்கள். மக்களுடைய கஷ்டங்களையும் மக்கள் குறைகளையும நன்கு அறிந்தவர் நமது முதல்வர் அவர்கள். அதே போல் மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சரை இந்த துறையினரால் செய்யக்கூடிய நல்ல காரியங்கள் அனைத்தும் அடிமட்டத்தில் இருக்கக் கூடிய கிராம மக்களைமேம்படுத்துவதற்காக அமைய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு கணேசன் கூறினார்.

பொன்னேரியில்

## திமுகவில் இருந்து 25 பேர் விலகல்

பொன்னேரி, ஆக 3. பொன்னேரி தொகுதியில் திமுகவில் இருந்து 25 பேர் விலகி கழகத்தில் சேர்ந்தனர்.

பொன்னேரித் தொகுதி அமைப்பாளர் முனுசாமி ராஜா தலைமையில் சட்டமன்ற உறுப்பினர் ஆர், சக்கரபாணி முன்னிலையில் இவர்கள் இணைந்தனர்.

அழிஞ்சி வாக்கத்தைச் சேர்ந்த குருநாதன், தாமோதரன், குப்பன், நடராசன், சந்திரய்யா, என். சண்முகம், ரங்கநாதன், அமீர் கோவிந்தசாமி ஆகியோர் திமுகவில் இருந்து விலகி கழகத்தில் இணைந்தனர்.

ஜெ. என். ஏ. தியேட்டர்ஸ் வெள்ளி விழாவில் வி.எஸ். ராகவனுக்கு கேடயம் வழங்கி, சந்தனமாலை அணிவித்து புரட்சித்தலைவர் பாராட்டினார்.

# காமராஜருக்கு மத்திய மந்திரி காட்டிய மரியாதை

மத்திய பெட்ரோலியத் துறை மந்திரி வீரேந்திர பாட்டீல்.

தர்மபுரி மாவட்டம் ஹோசூரில் நடந்த காமராஜர் பிறந்த நாள் விழாவில் இந்த மத்திய மந்திரி கலந்து கொண்டார்.

இந்த விழாவில், மத்திய மந்திரியோடு தமிழக இந்திரா காங்கிரஸ் தலைவர்களும் கலந்துகொண்டனர்.

காமராஜர் பிறந்த நாள் விழாவில்பேசிய மத்திய மந்திரி வீரேந்திர பாட்டீல் காமராஜரின் தியாக வரலாற்றை- தொண்டினை, நினைவுகூர்ந்து பேசவில்லை. காமராஜரைப்பற்றி ஒரு வார்த்தை- ஏன் காமராஜர் எனக்கூட அவர் பேசவில்லை.

தமிழ்நாட்டின் மண் எண்ணெ விநியோகத்தைப் பற்றி-கழக அரசைப் பற்றி பேசித் தீர்த்தார் இந்த மத்திய மந்திரி.

விழாவில் ஓர் நிகழ்ச்சியாக காமராஜர் படத்தை மத்திய மந்திரி திறக்கவேண்டும் என ஏற்பாடு.

ஆனல் வீரேந்திரபாட்டீல் தனது "வீரஉரை"யை முடித்தபிறகு- காமராஜர் படத்தை திறந்து வைக்க வேண்டும் என்பதையும் மறந்தார்.

பேச்சை முடித்த உடனே மேடையை விட்டு இறங்கி காரை நோக்கி நடந்தார்.

அப்போது ஒருவர் ஓடோடி வந்து காமராஜர் படத்தை திறந்து வைக்க வேண்டும் என்பதை நினைவூட்டினார்.

அப்போது தான் காமராஜரை பற்றியே நினைத்துக் கொண்ட மத்திய மந்திரி "ஓ கோ அப்படியா" எனக் கூறிக்கொண்டே மீண்டும் திரும்பி வந்து காமராஜா படத்தை அவசர அவசரமாக திறந்து வைத்துவிட்டு காருக்கு திரும்பி வந்தார்.

**நன்றியறிவிப்புக்கும் தேசிய கீதத்திற்கும் கூட மத்திய மந்திரி காத்திருக்கவில்லை.**

மத்திய மந்திரி காமராஜருக்கு காட்டிய மரியாதை எப்படி?

வேளாண்மைத்துறை

# என்ஜினியர்கள் சங்கம், அமைச்சர் காளிமுத்துக்கு நன்றி

**சென்னை, ஆக, 3- தமிழ்நாடு வேளாண்மைத்துறை பொறியயில் பட்டதாரிகள் சங்கம் அமைச்சர் காளிமுத்துவுக்கு நன்றியும் பாராட்டும் தெரிவித்தது.**

வேளாண்மைப் பொறியியல் பட்டதாரிகள் சங்கத்தின் சார்பில அமைச்சர் கா. காளிமுத்துவுக்குப் பாராட்டு விழா நடைபெற்றது.

பாராட்டு விழாவுக்கு வருகை தந்தவர்களை ரகுபதி வரவேற்றார்.

விழாவுக்கு சங்கரகுருராமன் தலைமைவகித்தார்.

பாலசுந்தரம் பாராட்டிதழ் வாசித்தளித்தார்.

விழாவில் இயக்குநர் சுப்பிரமணியம், தலைமை பொறியாளர் ராதாகாந்த சங்கப் பொதுச் செயலாளர் முகமதுகவுஸ் ஆகியோர் பாராட்டிப் பேசினர்.

கோவை மாவட்டச் செயலாளர் ஜீவராஜ் நன்றியுரையாற்றினர்.

7 ஆண்டுகோரிக்கையை ஏற்று வேளாண்மைத் துறையில் உள்ள பொறியயல் பிரிவினைத் தனிமைப் படுத்தி வேளாணமைப் பொறியியல் துறை என ஏற்படுத்தியதை யொட்டி அரசுக்கும் அமைச்சருக்கும பாராட்டுத் தெரிவித்து இவ்விழா நடைபெற்றது.

பாராட்டுக்கு நன்றி தெரிவித்து அமைச்சர் காளிமுத்து பேசும் போது கூறியதாவது:-

வேளாண்மை பொறியியல் துறை தனித்துறையாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது என்பதை உணர்ந்து அரசுக்கு நன்றி செலுத்துகிறீர்கள்.

## வளம், வலிமை

தனித்துறையாக இயங்குகின்ற இதற்கு வளம் தேவை, வலிமை தேவை என்பதை உணர்த்துகிறீர்கள்.

பொதுப்பணித்துறைக்கு சமமாக கருத வேண்டும் என்கிறீர்கள். அதை நான் மறுக்கிறேன் பொதுப்பணி துறைக்கு மேலாக கருதுகிறேன்.

பொதுப் பணித் துறையால் அழகான கட்டிடங்கள் கட்ட முடியும், மின் விளக்குகள் போட முடியும் அணைக்கட்டுகளை கட்ட முடியும் ஆனல் நிலத்தை உருவாக்கமுடியாது. விவசாய துறையில் நாம மண்ணைத் தான் நம்பி இருக்கிறோம் அது தான் நாடு என்பதை உணர்வீர்கள்.

இந்த துறையில் இருக்கும் பொறியியல்பணி இத்தனை காலம வெளி உலகுக்குத் தெரியாமல் இருந்தது. அதேபோல்பலரின் திறமை வெளியே தெரியாமல் இருந்தது.

உலக வங்கி திட்டத்தின் சார்பில் இருவர் என்னை சந்தித்து பேசினர்.

இஸ்ரேல் பாலைவனத்திலேயே அருமையாக விவசாயம் நடைபெறுவதை அறிவோம்.

அந்த உலகவங்கி பிரதிநிதி ஜப்பான் நாட்டைப் போல தைவான் நாட்டைப் போல உங்களால் முன்னேற முடியும் அந்த அளவுக்கு உங்கள் அலுவலர்கள்பணியாற்றுகிறார்கள் என்று பாராட்டினர்.

கோரிக்கை இருக்கத்தான் வேண்டும் கோரிக்கையை கேட்கக் கூடாது என்று சொல்ல மாட்டேன்

அழுகிற குழந்தை தான் பால் குடிக்கும். என்னுடைய குழந்தை நன்றாக அழுகிறது அந்த குழந்தைக்கு நல்ல சத்துணவை தந்து நல்லமுறையில் வளர செய்வேன்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து கூறினார்.

அமைச்சர் கே.ஏ.கே பங்கேற்ற

## ஷோரூம் திறப்பு விழா

சென்னை, ஆக. 3. சென்னை நந்தம்பாக்கம் பூந்தமல்லி ஐரோடில் 'விக்கி எண்டர்பிரைசஸ்' என்ற நிறுவனத்தை ஊரகத் தொழில்துறை அமைச்சர் கே. ஏ. கே. இன்று காலை தொடங்கி வைத்தார்.

அதோடு சிறு தொழிற் கூடத்திற்கான அடிக்கல் நாட்டு விழாவிலும் அமைச்சர் கே ஏ கே பங்கேற்றார்.

நிகழ்ச்சிக்கு ஆலந்தூர் தொகுதி கழக எம் எல் ஏ அப்துல்ரசாக் தலைமை வகித்தார்.

விழாவில் பேசிய அமைச்சர் கே ஏ கே இத்தகைய சிறுதொழில்களுக்கு உதவுவது புரட்சிததலைவரின் கழக அரசின் நோக்கமாகும் எனக் கூறினார்.

வேணுகோபால் நன்றி தெரிவித்தார்.

"பொற்காலம்" படப்பிடிப்பை காமிராவை முடுக்கி துவக்கி வைப்பதற்கு முன்பு புரட்சித் தலைவருடன் விஜயன், சுகுமார், டைரக்டர் துரை தமிழக அரசு திரைப் படக் கல்லூரி முதல்வர் டைரக்டர் நீலகண்டன் ஒளிப்பதிவாளர் மனோகர்.

அமைச்சர் கோமதி சீனிவாசன்

## ஆதரவற்ற பெண்களுக்கு தையல் மிஷின்கள்

கடலூர், ஆக 3. தென்னாற்காடு மாவட்ட கலெக்டர் என். ராஜகோபாலன் தலைமையில் கடலூரில் நடந்த விழா ஒன்றில், ஆதரவற்ற நிலையில் இருந்த பெண்கள் மற்றும் விதவை பெண்கள் 81 பேருக்கு சமூகநலத்துறை அமைச்சர் கோமதி சினிவாசன் தையல்மெஷின்களை வழங்கினார்.

உடல் ஊனமுற்ற ஒன்பது பேருக்கு 3 சக்கர சைக்கிள்களையும் காது கேளாத 19 பேருக்கு காது கேட்கும் கருவிகளையும் அமைச்சர் கோமதி சினிவாசன் வழங்கினார்,

விழாவில் பேசிமாயவட்ட கலெக்டர் என். ராஜகோபாலன், தென்னாற்காடு மாவட்டத்தில் முதியோர் உதவித் தொகை 5138 பேருக்கும், உடல் ஊனமுற்றோர் உதவித் தொகை 745 பேருக்கும் ஆதரவற்ற விதவைப் பெண்களுக்கான உதவித் தொகை 1139 பேருக்கும் வழங்கப்படுவதாகத் தெரிவித்தார்.

தூத்துக்குடி அருகில்

## தைவான் படகு பறிமுதல்: 16 பேர் கைது

தூத்துக்குடி, ஆக. 3- தூத்துக்குடி துறைமுகம் அருகில் தைவான்நாட்டு விசைப்படகு ஒன்றை இந்தியக் கடற்படையினர் பிடித்தனர். அதில் இருந்த 16 சீன மாலுமிகள் கைது செய்யப்பட்டனர்.

அனுமதியின்றி சர்வதேச உடன்பாட்டை மீறி இந்திய கடலோரப் பகுதிக்குள் அத்துமீறி நுழைந்ததற்காக இந்திய கடற்படை ரோந்துப் பிரிவினர் நடுக்கடலில் மடக்கிப் பிடித்தனர். விசாரணை நடந்து வருகிறது.



Published by K. Ravindran on behalf of Thangamani Publications, 275, Avvai Shanmugam salai, Madras-14 and printed by him at Print House, 1, First Main Road, United India Colony, Madras-24. Editor: E. PARASURAMAN.

# நாடககலைஞர்களின் நலிவை நீக்க

# புதிய திட்டம்

## மாவட்டந்தோறும் நாடக அரங்குகள்-முதல்வர் புரட்சித் தலைவர் அறிவிப்பு

சென்னை, ஆக. 3- நாடகக் கலைஞர்களுக்கு பாதுகாப்புக் கொடுக்க மாவட்டந்தோறும் நாடக அரங்குகளைக் கட்ட தமிழக அரசு ஆலோசித்து வருகிறது என்று முதல்வர் புரட்சித்தலைவர் கூறினர்.

நடிகர் வி. எஸ். ராகவனின் ஐ.என்.ஏ. தியேட்டர்சின் வெள்ளி விழா சென்னை மியூசிக் அகாடமியில் நடந்தது.

முதல்வர் புரட்சித்தலைவர் விழாவில் கலந்து கொண்டு நடிகர் வி எஸ்ராகவனுக்கு பொன்னாடை போர்த்திப் பேசினர்.

விழாவிற்கு துக்ளக் ஆசிரியர் சோ தலைமை வகித்தார்.

தென்னிந்தியதிரைப்பட வர்த்தக சபை செயலாளர் டி. ராமானுஜம், நாரத கான சபா செயலாளர் ஆர். கிருஷ்ணசாமி சென்னை நகர சபாக்கள் சங்க செயலாளர் டி. எஸ். கிருஷ்ண மூர்த்தி ஆகியோர் வி எஸ் ராகவனைப் பாராட்டிப் பேசினர்கள்.

சென்னை நகர சபாக்கள் சார்பிலும், வெள்ளி விழா வரவேற்பு கமிட்டி சார்பிலும் வழங்கப்பட்ட பொன்னாடைகளை வி எஸ் ராகவனுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் போர்த்தினர்.

வெள்ளிவிழா வரவேற்புக் குழுத்தலைவர் கே முருகேசன் முதல்வர் புரட்சித் தலைவருக்கு பொன்னாடை அணிவிக்க விரும்பினர். அதனை வாங்கி வி எஸ்ராகவனுக்கு புரட்சித்தலைவர் அணிவித்தார்.

முருகாலயா பிலிம்சாரின் தேவர் விருது, இளங்கோ கலைமன்றம் சார்பில் பாராட்டு இதழ் ஆகியன வி எஸ் ராகவனுக்கு வழங்கப்பட்டன.

பிரபாத் கல்சுரல் அகாடமி 'நாடகச் செம்மல்' என்ற பட்டத்தையும். தமிழ்நாடு நல்வழி நிலையம் 'குணகலைச் செல்வன்' என்ற பட்டத்தையும் வி எஸ் ராகவனுக்கு வழங்கியது.

### விழா மலர்

வெள்ளி விழா மலரை எஸ் வி சகஸ்ரநாமம் வெளியிட்டார். அதை டி வி என் பெற்றுக் கொண்டார்,

நாடகஆசிரியர்களுக்கும் நாடகத்தில் பங்கு கொண்டவர்களுக்கும் பரிசுகள் வழங்கப்பட்டன.

முன்னதாகவிழாக்குழுத் தலைவர் கே முருகேசன் வரவேற்ருர் வி எஸ் ராகவன் நன்றி கூறினர்.

வெள்ளிவிழா தொடங்குவதற்கு முன்பு நடிகர்கள் வி. எஸ். ராகவன், ஸ்ரீகாந்த் பங்கேற்ற 'தார்மயுத்தம்' என்ற நாடகம் நடந்தது.

கழகப் பொதுச் செயலாளர் ப. உ. ச. அமைச்சர்கள் கே.ஏ.கே., திருநாவுக்கரசு மற்றும் ஜேப்பியார் எம்.எல்.சி. சித்ர மகால் கிருஷ்ணமூர்த்தி, நீதிபதிகோகுலகிருஷ்ணன் டி.கே. பகவதி ஆகியோரும் விழாவிற்கு வந்திருந்தனர்,

முதல்வர் புரட்சித்தலைவா பேசியதாவது,"

இன்றையதினம் இங்கே நடைபெறுகின்ற இந்த நாடகத்தில் கலந்து கொள்வதற்கு எவ்வளவோ வேலைகள் இருக்கின்றன என்று சொன்னாலும் கூட இந்த நிகழ்ச்சியில் நான் கலந்து கொள்வதன் மூலம் மன மகிழ்ச்சிமட்டுமல்ல நிம்மதி ஆறுதல் ஏற்படுகிறது.

### தர்மயுத்தம் சிக்கல்

ஒரு தர்மயுத்தத்தில் எப்படி சிக்கல்கள் தோன்றும் என்பதை எடுத்துக் காட்டியிருக்கிறார்கள்.

மனிதனுக்கு அவ்வப்போது பல பிரச்சினைகள் தோன்றுவது இயற்கை. வரலுக்கு தகுந்த வீககம் தான இருக்க வேண்டும் என்பதை நாம உணர்ந்து கொள்ள மிகப் பெரிய வாய்ப்பு இந்த நாடகத்தின் மூலம் கிடைத்துள்ளது.

இங்கே பாராட்டப்படுகிறவர் யார்? எதற்காக பாராட்டப்படுகிறார்? இது நாட்டுமக்களுக்கு முழுமையாக சொல்லப்படும் நிலைமை இல்லை என்று சொன்னால் யாரும் வருத்தப்படமாட்டார்கள் என்று நினைக்கிறேன்.

ராகவனை இங்கே அறிமுகப் படுத்தப் படவேண்டிய அவசியமில்லை. இவ்வளவு அனுபவம் திறமை இருந்தும் தமிழகம் முழுவதும் அவர் அறிமுகப் படுத்தப் பட்டாரா என்றால் இல்லை.

காரணம் எதுவாகஇருந்தாலும் அவர் தன்னுடைய முழுத் திறமையை வெளிப்படுதத வாய்ப்புகள் தரப்படவில்லை. இருப்பினும் வரவேற்புக் குழுவினர் இப்படி முயற்சி செய்துள்ளது பாராட்டத் தக்கது.

அவர் நல்ல கலைஞர். நல்ல நண்பர். பண்போடு வாழ்பவர் நுணுக்கத் திறமைப் பெற்றவர்.

தர்மயுத்தம் நாடகத்தில் நடித்தவர்கள் அனைவரும் நன்ருக நடித்துள்ளனர். நாடகம் பார்த்த நமக்கு சோர்வு தராமல் செய்துள்ளனர். அந்த பெருமை அவர்கள் அத்தனை பேருக்கும் சாரும்.

### பார்வை போதுமே

வேலைக்காரர் வேடம் போட்டவர் வந்து பார்த்த பார்வையே போதும். அப்படி சிறப்பாக நடித்தார்,

ஒரு நடிகரின் நடிப்பு சோபிக்க வேண்டுமென்ருல் அவருடன் நடித்த நடிகரின் நடிப்பு எதிரொலியாக - பிரதிபலிப்பாக இருக்க வேண்டும் அப்போது தான் அவர் தனது திறமையைக் காட்டமுடியும்.

அப்படியில்லை என்றால் அவர் சோபிக்கமுடியாது. துணை நடிகர்கள் என்று நான் சொல்லமாட்டேன், துணை நிற்கிற நடிகர்களும் அப்படி நடிக்க வேண்டும்

இந்தநாடகத்தில், அவர்கள் ஒவ்வொருவரும் கதாநாயகர்களாக மாறுகிறார்கள். இன்னார்தான் கதாநாயகா. இன்னார்தான் துணை நடிகர் என்று பிரித்துச் சொல்ல முடியாமல் அவர்கள் ஒவ்வொருவரும் அவரவர்கள் பாத்திரத்தில் கதாநாயகர்களாக மாறுகிறார்கள். அவர்கள் நடிப்பு அப்படி உள்ளது.

ஒருவரை ஒருவர் அடிக்கிருர் என்ருல் அடிபட்டவர் நடிப்பைக் காட்ட வேண்டும். ஓங்கி அடித்தவரும் அடிவாங்கியவரும் கம்பம் போல நிற்கக்கூடாது! இதைத்தான் நாம ரியாக்ஷன் என்று சொல்கிறோம். சிலர் இப்படி ரியாக்ஷன் தருவதில்லை.

(சோ குறுக்கிட்டுஏதோ சொல்கிறார்)

அவரைப்பற்றி சொல்கிறேனே என்று சோ கேட்கிறார். யாரைப்பற்றிச் சொல்கிறேன் என்பது அவருக்குத் தெரியும்.

இந்த நாடகத்திற்கு தர்மயுத்தம் என்று பெயர் வைத்துள்ளனர்.

அடக்கம், பொறுமை காட்டி தனது பையனுக்கு அவலம் வரக்கூடாது! அவன்நிரபராதி என்பதை வெளிக் காட்ட தனது மகனின் அவமானத்தையும் பொறுத்துக் கொள்கிறார்.

### நல்ல முடிவு

கடைசியில் வெற்றி பெற்ற நிலையிலும் உள்ளம் நெகிழத்தக்க வகையில் கதையை முடித்துள்ளனர்.

அனுபவம் வாய்ந்த ராகவன் யாரும் செய்யாததை செய்துள்ளார், ஒரு காட்சி அமைப்பை வைத்துக் கொண்டு நாடகம் நடத்தி வருகிறார்.

இயற்கையான நடிப்புடன் உரையாடல்வேண்டும் சுப்பிரமணியம் செட்டியார் அவர்கள் தமிழ் அறிஞர், கவிஞர், கவிதையாளர் 'இரு சகோதரர்கள்' என்ற திரைப்படத்துக்கு உரையாடல்கள் எழுதினார் நாடகத் தமிழ் முறையில் உரையாடல்கள் இருந்தன

இன்று மேடையில் ரசிகர்கள் ரசிக்க நாடகத் தமிழ் இல்லை. அது வரலாற்றுச் சிறப்பு மிக்க புராணங்களிலும் கிராமக் கலைகளில் மட்டுமே உள்ளது. நவீன சமூகத்தில் வழக்குச் சொல் கையாளப்பட்டு வருகிறது

உரையாடல்கள் தேவையை நீண்ட காலத்திற்குப்பிறகு பலர் உணர்ந்தார்கள்.

நாடகத்தில் நடிப்பவர்கள் சினிமாவுக்கு வரவில்லையே என்று டி. ராமானுஜம் பேசும் போது குறிப்பிட்டார்,

கடந்த தேர்தல் சமயத்தில் சேலம் சென்றிருந்த போது பல நடிகையர்-புது கதாநாயகர்கள் என்னைச் சந்தித்துப் பேசினர்.

கதாநாயகனுக நடிக்கும் போது உணர்ச்சி வசப்படுகிறோம் என்று சொன்னார்கள்.

நடிகர்கள் தாங்கள் நடிக்கும் பாத்திரத்திற்குசொந்தக்காரர்களாக இருக்க வேண்டுமே தவிர உணர்ச்சிகளுக்கு சொந்தக்காரர்களாகி விடக்கூடாது,

சினிமாவில் கிளிசரின் போட்டுக் கொண்டு அழலாம் நாடகத்தில் அப்படி அல்ல அழ வேண்டிய நேரத்தில் அழ வேண்டும் உணர்ச்சிகளை நடிப்பால் வெளிப்படுத்த வேண்டும்.

சிரித்துக் கொண்டு நடிக்கும் போது உடனே அழ வேண்டும் இப்படிச் செய்வதால் உடலுக்கு பாதகம் ஏற்படும். மருத்துவர்களை அணுகிஉடலைச்சமப்படுத்த வேண்டும். நடிகர்கள் தங்கள் உடலைப் பேணிப் பாதுகாக்கவேண்டும்.

### நாடகக் கொட்டகை

நாடகக் கலைஞர்களுக்கு பாதுகாப்புக் கிடைக்க வேண்டும். தமிழகஅரசு பல்வேறுமாவட்டங்களில்நாடக கொட்டகைகள் கட்ட முடிவு செய்துள்ளது. இதற்கான திட்டங்களை தீட்டி வருகிறோம்;

இவ்வளவு அனுபவம் பெற்று நாடகங்களை நடத்தி வரும் ராகவனின் எதிர்காலத்துக்கு உத்திரவாதம் இருக்கிறதா என்ருல் இல்லை.

எனக்கு உழைப்பு உத்திரவாதமாக இருக்கிறது என்று ராகவன் சொல்லலாம்.

மக்களை மகிழ்வித்து அவர்களை வாழ வைக்கும் கலைஞர்களின் வருமானம் குறைவு.

25வருடகாலமாக நாடகங்களை நடத்தி தனது அமைப்பை காப்பாற்றி வருகிருர்.

ஸ்ரீகாந்த் போன்றநடிகர்களை நடிக்க வைக்கிருர். பிரம்மபிரயத்தனம் என்று சொல்வார்களே அது போல் நடத்தி வருகிருர் என்று கூறலாம்,

இந்த 25 வருடங்களில் எத்தனையோ கலைஞர்களை இந்த அமைப்பு உருவாக்கியிருக்கிறது.

அவரது கலைப்பணிமேலும் தொடர வேண்டும்.

வெகு விரைவில் நிறைவான வாழ்வு அவருக்கு கிடைக்கும்.

இவ்வாறு முதல்வா புரட்சித்தலைவா பேசினர்.

### அமைச்சர்கள் பங்கேற்ற அச்சக துவக்க விழா

சென்னை, ஆக. 3- சென்னை பீட்டர்ஸ சாலையில் பிரசன்ன ஆப்செட் பிரிண்டர்ஸ் என்ற அச்சகத்தை ஊரக தொழில் துறை அமைச்சர் கே ஏ. கே, முன்னிலையில் தொழில்துறை அமைச்சா எஸ் திருநாவுக்கரசு துவக்கி வைத்தார்.

விழாவுக்கு வந்திருந்தோரை சிவகாசி தொகுதி கழகஎம் எல் ஏ வி பால கிருஷ்ணன் வரவேற்ருர்.

அமைச்சர்களுக்கு ஆறுமுகசாமி பொன்னாடை போர்த்தினர் குப்புசாமி நன்றி கூறினர்.

## கருநாடக மாநிலம் உறுப்பினர் உரிமைச் சீட்டு

கருநாடக மாநில சீரமைப்புக்குழு செயலாளர் சுந்தாம் அவர்களிடம் கொடுத்தது மொத்தம்: 1200

கீழ்க்கண்ட கிளைக்கழகங்களுக்காக கொடுக்கப்பட்டது

சத்யசீலன் - எம். ஜி. ஆர், மன்றம், 12வது டிவிஷன் பெங்களூர்

கந்தசாமி - ராமச்சந்திரபுரம் ,, ,,
எஸ் மன்னப்பா, 16வது டிவிஷன்
எஸ் நீலகிருஷ்ணன் - 17வது டிவிஷன்
தங்கவேலு - 18வது டிவிஷன்
சுந்தரம் - (20வது டிவிஷனுக்காக)
தேவசகாயம் - 26வது டிவிஷன்
ஏ எஸ் மணி - 35வது டிவிஷன்
எம் ஜெயகுமார் - 45வது டிவிஷன்
சுந்தரம் - (20வது டிவிஷனுக்காக)
ஏ நாராயணன் - 48வது டிவிஷன்
எல் வெங்கடேஷ் - யாருப் நகா
சி சித்தாராஜி - சிங்கநல்லூர்
எம் பிச்சை - பாரதி காலனி, கிளைக்கழகம்
ஏ டி பிரான்சிஸ், ஹன்சூர்
கோபாலகிருஷ்ணன - மோகலா பகுதி பெங்களூர்

# அண்ணா



## முத்துலிங்கம் பாடல் பதிவு

வேலாயுதா பிலிம்ஸ் தயாரித்துவரும் "நதிஒரப் பூந்தமலர்" வண்ணப் படத்திற்காக கவிஞர் முத்துலிங்கம் எழுதி ஜேசுதாஸ் வாணிஜெயராம் பாடிய

"ஆசை நெஞ்சில்ராகம் என்வாழ்வின் இன்கீதம்" என்ற பாடல் சங்கர்-கணேஷ் இசையமைப்பில் ஏவி எம்மில் பதிவாக்கப் பட்டது.

சிவச்சந்திரன், வடிவுக்கரசி, அறிவழகன், வனிதா, ஐசர்க்வலன், காந்திமதி, சா கோபால கிருஷ்ணன், முரளிகுமார், சாந்தா மற்றும் பலர் நடிக்கின்றனர்.

திருமதி ஜி ராணியின் கதைக்கு கீதாசாரியன் வசனம் எழுதுகிறார், பி சுரேஷ் ஒளிப்பதிவை கவனிக்கிறார் திரைக் கதை டைரக்ஷன் ஜெயமணி.

❋

## பாவாடக்காரி

(மலையாளம்)

தங்கையைக் கொலை செய்தவனை கண்டு பிடிக்க ஒருவனும், அக்காவை கொலை செய்தவனை தேடி இரு தங்கைகளும் புறப்படுகின்றனர். கொள்ளை, கொலை- கடத்தல்- பழிக்குப்பழி கதை! சண்டை காட்சிகளுக்குக் குறைவே இல்லை.

விஜயலலிதா, தீபா, மஞ்சுளா, வின்சென்ட், ஜெயச்சந்திரன், மற்றும் பலர் நடித்துள்ளனர்.

ஏ. டி. உம்மர் இசை அமைத்துள்ளார்,

அலெக்ஸ் டைரக்ட் செய்துள்ளார்.

'காடு' படத்தில் யானையுடன் வனிதா

## படப்பிடிப்பில் விபத்துக்கள்!

கலையுலக வாழ்க்கை என்றாலே ஆடம்பரம், அதிக விளம்பரம், பங்களா, கார், செல்வம், செல்வாக்கு இவைதான்! பலரது எண்ணத்தில் பவனி வருகின்றன. அந்தத் துறையில் உள்ளவர்கள் சந்திக்கும் சோதனைகள், சிரமங்கள், விபத்துக்கள் எத்தனை? இதோ சில

சத்யகலா படநிறுவனத்தினர் தயாரித்து வரும் 'பொன்விலங்கு' படப்பிடிப்பில் கலந்து கொண்ட மஞ்சுபார்கவி, விஜய்பாபு இருவரும் பயங்கர விபத்தில் சிக்கவிருந்தவர்கள் உயிர் தப்பினார்கள்.

கொடைக்கானலில் மிக உயரமான பகுதியில் படப்பிடிப்பை நடத்த எல்லோரும் சென்றனர். கார் ஒன்றில் மஞ்சுபார்கவியும், விஜய்பாபுவும் அமர்ந்திருந்தனர் டிரைவர் காரை நிறுத்திவிட்டுப் போய்விட்டார்.

### மஞ்சுபார்கவி உயிர்தப்பினர்

சிறிது நேரத்தில் மஞ்சுபார்கவியும், விஜய்பாபுவும் அமர்ந்திருந்த கார் கீழ்நோக்கி பின்னால் ஓடத் தொடங்கியது. காருக்குள் இருந்த மஞ்சுபார்கவியும்- விஜய்பாபுவும் அலறத் தொடங்கினர்.

அவர்கள் அலறலைக் கேட்டுவிட்டு டைரக்டர் காஜா, அருண் மற்றும் பலர் ஓடிச்சென்றுகாரைப் பிடித்து இழுத்து கீழே போகாமல் தடுத்தனர். டிரைவர் ஹரி காருக்குள் பாய்ந்து பிரேக் போட்டு நிறுத்தினார்.

ஒருசில வினாடிகள் தாமதித்திருந்தாலும் காருடன் மஞ்சுபார்கவியும், விஜய் பாபுவும் மலை உச்சியில் இருந்து அதலபாதாளத்தில் விழுந்து நொறுங்கியிருப்பார்கள்.

விபத்திலிருந்து தப்பித்த விஜய்பாபுவும், மஞ்சுபார்கவியும் குறிஞ்சி ஆண்டவர் முருகனை சென்று வணங்கி பீதியிலிருந்து விடுபட்டனராம்.

பூம்பாறை மலை உச்சியில் மஞ்சுபார்கவியும், விஜய்பாபுவும் பாடி ஆடும் காட்சி படமாக்கப்பட்டது.

### இரண்டாவது ஆபத்து

"பேசும் தமிழ்ச்சங்கம் ஒரு பெண்ணாக வந்தாள்" என்ற பாடல் காட்சி படமாக்கப்பட்டது திடீரென்று மேக் கூட்டங்கள் மஞ்சு பார்கவியையும் விஜய்பாபுவையும் மூடிக்கொண்டன, அவர்கள் எங்கே இருக்கிறார்கள் என்னஆனார்கள்? என்று தெரியாமல் எல்லோரும் தேட ஆரம்பித்தனர்

"எல்லோரும் அவரவர் இடத்திலேயே இருங்கள். எங்கும் நகரவேண்டாம். நடக்க ஆரம்பித்தால் மலைச்சரிவில் விழவேண்டி வரும்" என்று டைரக்டர் காஜா சத்தம் போட்டார்

அரைமணி நேரம் சென்ற பின்புதான் மேகக்கூட்டங்கள் நகர்ந்தன. நல்ல வேளையாக யாருக்கும் எந்த ஆபத்தும் இல்லை பின்பு படப்பிடிப்பை நடத்தினர்

'பொன் விலங்கு' படத்தில் விஜய்பாபு, சுஹாஷினி மஞ்சுபார்கவி, சுருளி ராஜன். காந்திமதி, என்னத்தே கன்னையா, குள்ளமணி, புதுமுகம் ஸ்ரீகலா ஆகியோர் நடிக்கின்றனர்.

நா. பார்த்தசாரதி கதைக்கு வியட்நாம் வீடு சுந்தரம் வசனம் எழுதுகிறார், டி.வி. பாலு ஒளிப்பதிவு செய்கிறார் சங்கர் கணேஷ் இசையமைக்கின்றனர். செல்வி அருண்சத்யவதி தயாரிக்கின்றனர்.

திரைக் கதை டைரக்ஷனை காஜா கவனிக்கிறார்.

'எரிமலை' படத்தில் ரஜனிகாந்த்

'உச்சக்கட்டம்' படத்தில் ஒருவிரல் கிருஷ்ணராவ் குழுவினர்

## ஒரு கை ஓசை

-: பா. வளர்மதி :-

ஊமையின் கனவுகளை சித்தரித்துக்காட்டும் படம் ஒரு கை ஓசை!

பல இடங்களில் பாக்யராஜின் நடிப்பு பட்டை தீட்டிய வைரம் போல் ஜொலிக்கிறது.

குழந்தைக்காக பிரார்த்தனை செய்துகொண்டு வேண்டுதல் செய்யும் முன்பு சின்னப்பண்ணையின் காலில் தந்தை வணங்குகிறார். தான் பீடி குடித்த

### ஒரு அரசியல்வாதி விமர்சிக்கிறார்

போது தலையில் தந்தை அடித்ததையும், இப்போது தனது காலில் விழுந்து வணங்குவதையும் நினைத்து அவன் சிரித்துக்கொள்கிறான்.

தற்கொலை செய்து கொள்ளும் எண்ணத்தில் தண்டவாளத்தில் தலையை வைத்துப் படுப்பதும், அதில் அழுக்குஇருப்பதைஅறிந்து சட்டையாலும் கையாலும் துடைத்து விட்டு தலையை வைத்து கண்களை இறுக மூடிக்கொண்ட பின்பு வேறொரு பாதையில் ரயில் சென்று விடுவதைக் காண்பிப்பது நன்றாக உள்ளது.

கடைசியில் பரிசலில் செல்லும் போது 'எங்கே போக வேண்டும்?' என்று படகோட்டி கேட்க "போயும் போயும் பேச்சு வந்தவுடன் முதலில் இவனுடனா பேச வேண்டும்" என்று எண்ணி தான் காதலிக்கும் டாக்டரிடம் முதன் முதலில் பேசநினைப்பதும் அங்கே வந்து பார்க்கும்போது டாக்டர் தனது காதலனிடம்பேசிக்கொண்டிருப்பதைக் கண்டு அமைதியாக ஏமாற்றத்தை வெளிக் காட்டுவதும் சிறப்பாக உள்ளது.

'அவன் ஊமையாக இருந்தபோது பேசவேண்டும் என்று நினைத்தான். பேச்சு வந்தபோது ஊமையாக இருக்க ஆசைப்பட்டான்' என்று கதையை முடிப்பது நன்றாக உள்ளது.

படம் போவதே தெரிவதில்லை. அவ்வளவு விறுவிறுப்பு எல்லாதரப்பு மக்களும் ரசிக்கக் கூடிய படமாக "ஒரு கை ஓசை" உள்ளது.

## பேய்கள் வாழும் இடம் எது?

ஆறுமுகமும், அந்தோணியும் மதத்தால் வேறுபட்டு இருந்தாலும் மனத்தால் ஒன்றுபட்டவர்கள்.

ஒருநாள்!

கடலில் மீன்பிடிக்கச் சென்ற அவர்கள் சூறவளியின் கோரப்பிடியில் சிக்குகின்றனர். பக்கபலமாக இருந்த அத்தனை பேரும் சூறவளிக்குப் பலியாகின்றனர்.

ஆறுமுகமும் அந்தோணியும் மட்டும் தப்பித்து ஒரு தீவில் ஒதுங்குகின்றனர். எப்படியோ உயிர் பிழைத்து விட்டோம் என்ற மகிழ்ச்சி ஏற்பட்டாலும் "இங்கேயா வந்தோம்!" என்ற திகில் அவர்களை ஆட்டிப் படைக்கிறது.

காரணம்!

அந்தத் தீவில் பேய்கள் ஆளுகின்றன என்று அந்தப்பக்கமாக யாரும் எட்டிக் கூடப் பார்ப்பதில்லை.

சூறவளிக்குத் தப்பிப் பேய்களிடத்தில் அகப்பட்டுக் கொள்வதா என்று கலங்கும் ஆறுமுகத்துக்கு அந்தோணி துணி வூட்டுகிறான்,

### சாவு எங்கே?

கடலில் நெடுந்தூரம் செல்வதற்கு படகோ, கட்டுமரமோ இல்லை. இந்த நிலையில் சாவுஎங்கே வந்தால் என்ன என்று எடுத்துக் கூறுகிறான்.

தீவின் இயற்கை அழகும் தென்னைமரச் சோலையும் கனி குலுங்கும் மரங்களும் பேய்க் கதையை அவனை நம்பவிடாமல் தடுக்கின்றன.

அந்தத் தீவின் ஓரத்தில் மீன்கள் அதிகமாககிடைப்பதையும் காணுகின்றனர்,

நேரம் செல்லச் செல்ல நாட்கள் நகர - நகர பேய் பயம் போய், அங்கேயே தங்கிவிடலாம் என்ற துணிவு ஏற்படுகிறது.

மூடநம்பிக்கையின் காரணமாக யாரோ கட்டிவிட்ட கட்டுக் கதையை நம்பிவளம்கொழிக்கும் அழகான ஒரு தீவை இதுவரை

### மூடத்தனங்களை சாடவரும் 'சூறவளி'

ஒதுக்கிவைத்ததைஎண்ணி வருந்துகின்றனர். சிரமப்பட்டு மீண்டும் ஊருக்குச் சென்று மற்ற மீனவர்களிடம் அந்தத் தீவைப்பற்றிக் கூறுகின்றனர்.

மற்றவர்களுக்கு அவர்கள் சொல்வதைக் கேட்கக் கேட்க ஆசை ஏற்பட்டாலும், உயிரை நினைத்து பயந்து வரமறுக்கின்றனர்.

யார் வந்தாலும் வராவிட்டாலும் பரவாயில்லை என்று நண்பர்கள் தங்கள் குடும்பங்களுடன் தீவுக்கு வருகின்றனர்.

அவர்கள் செழிப்பைக் கண்ட மற்ற மீனவர்கள் காலப்போக்கில் பயம் தெளிந்து தீவுக்கு வருகின்றனர்:

தீவில் கூட்டம் அதிகமாகிறது, கோயில்கள் உருவாகின்றன. வசதிகள் பெருகப் பெருக வஞ்சகம், பொறாமை, உயர்வுதாழ்வு கருதும் மனப்பான்மைகள் உருவாகின்றன.

அந்தத் தீவில் பேய் இருப்பதாக பயந்த அவர்கள், தங்கள் மனதில்தான் பேய் குடி கொண்டிருக்கிறது என்று உணரும்காலம் வருகிறது.

### திருச்செந்தூர் கடலோரத்தில்

எம் ஏ அப்பாஸ் எழுதிய புதுமையான கதையான 'சூறவளி'யை இயக்கியிருப்பவர் நிமாய் கோஷ்!

விஜய், லாவண்யா, மேஜர் சுந்தர்ராஜன். என் எஸ் ராமசாமி, சௌந்தர். நாஞ்சில் நளினி ஆகியோர் நடிக்கின்றனர்.

படப்பிடிப்பு திருச்செந்தூர் கடலோரப் பகுதிகளில் நடைபெற்றது.

விரைவில் சூறவளியை தமிழகத் திரையரங்குகளில் காணலாம்.

'சிங்காரச்சிட்டுகள்' படத்தில் இந்து

நாகதருமன்

## சுஜாதா நாட்டிய அரங்கேற்றம்

என் எஸ் ராமமூர்த்தியின் மகள் செல்வி சுஜாதா நாட்டிய அரங்கேற்றம் ராணி சீதை அரங்கில் நடைபெற்றது.

விழாவிற்குத் தலைமை வகித்த தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றச் செயலாளர் டி வி நாராயணசாமியும் நடிகை ஜெயசித்ராவும் சுஜாதாவைப் பாராட்டினர்.

❋

### சென்னையில் சிறந்த தியேட்டர்

சினிமா ரசிகர் சங்கம் 29வது ஆண்டு பரிசளிப்பிற்காக சிறந்த ஏர்கண்டிஷன் தியேட்டர்களாக ஈகா, ராஜேஸ்வரி தியேட்டர்களையும், சிறப்புப் பரிசுக்கு உரியவையாக அலங்கார் முரளிகிருஷ்ணா, சுபம் தியேட்டர்களையும் தேர்ந்தெடுத்துள்ளது.

அகஸ்தியா, மேகலா தியேட்டர்களைச் சிறந்த தியேட்டர்களாகவும், சிறப்புப் பரிசுக் குரிய தியேட்டர்களாக கமலா புவனேசுவரி தியேட்டர்களும், பாராட்டுப் பத்திரங்களுக்குரியவையாக சயானி, நடராஜ் ஆகியவைகளும்தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளன.

### கல்யாணம்

சிறந்த பிரிவியூ தியேட்டராக மினி ஆனந்த், தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது. படங்களைத் திரையிட்டுபார்த்து தேர்வுசெய்வதற்கு முழு ஆதரவும் ஒத்துழைப்பும் தந்ததற்கு சினிமா ரசிகர் சங்கம் மினி ஆனந்த் மேனேஜர் கல்யாணத்திற்கு பாராட்டுத் தெரிவித்துள்ளது.

## சரிதாவின் விவாகரத்து

அலுவலகத்தில் பணி புரிந்து கொண்டிருக்கும் ரவியிடம் அவனது நண்பன் ஒரு கடிதத்தை நீட்டினான்.

"கடிதத்தில் அப்படி புது விஷயம் என்னடா இருக்கப் போகிறது? நீதான் படியேன்" என்கிறான் ரவி.

"இனியும் உங்களோடு வாழ்க்கை நடத்தஎன்னால் முடியாது, ஆகவே. உடனே விவாகரத்துச் செய்ய உங்கள் சம்மதத்தைத் தெரிவிக்க வேண்டுகிறேன். இப்படிக்கு உங்கள் மாஜி மனைவி சுகுணா" என்று கடிதத்தைநண்பன் படிக்கிறான்,

ரவி அதிர்ச்சியடைந்தாலும் எப்படியாவது மனைவியை சமாதானப் படுத்தி விடலாம் என்று கருதுகிறான். மனைவி விவாகரத்து கேட்பதற்குக் காரணம் அவனுடைய ஆண்மைக் குறைவுதான் என்று அலுவலகத்தில் உள்ளவர்கள் ரவியை சீண்டிவிடுகின்றனர் அவன் ஆத்திரமடைந்துஇனிமேல் மனைவி சுகுணாவுடன் இணைந்து வாழக்கூடாது என்ற முடிவிற்கு வருகிறான்.

இந்தக் காட்சி "மௌன கீதங்கள்" படத்திற்காக படமாக்கப்பட்டதும் ரவியாகபாக்யராஜும், சுகுணாவாக சரிதாவும்நடித்தனர் பசுவராஜ்ஒளிப்பதிவு செய்தார்.

கதை வசனம் டைரக்ஷன் பொறுப்புகளை பாக்யராஜ் ஏற்றுள்ளார் கே. கோபிநாதன்தயாரிக்கிறார்

## கலை விருந்து

'மனைவி உருவாகிறாள்' படத்தில் அனுபல்லவி